ஸ்ரீ :



குணசீலம்

# ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாஜலபதி ஸ்வாமி திருக்கோயில்

## க்ஷேத்திர வரலாறு




வெளியீடு :

பரம்பரை டிரஸ்டிகள் குணசீலம் திருக்கோயில்

முசிறி வட்டம், திருச்சி மாவட்டம்.

ஸ்ரீ :

ஸ்ரீ ராமஜெயம்



# குணசீலம் ஸ்தல புராணம்

## ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் திருக்கோயில்

குணசீலம் - முசிறி வட்டம் திருச்சி மாவட்டம்

முதல்பதிப்பு :

விலை ரூ. 40.00

திருச்சி மாவட்டம் – முசிறி வட்டம் குணசீலம்
ஸ்ரீபிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் திருக்கோயில்

# ஸ்தல விளக்கம்

| | | |
|---|---|---|
| ஸ்தலம் | : | குணசீலம் பிரார்த்தனை ஸ்தலம் |
| காரணம் | : | குணசீலமஹரிஷிக்கு வைகுண்ட வாஸுதேவன் காட்சியளித்ததால் மஹரிஷியின் பெயராலேயே இந்த ஷேத்திரம் அழைக்கப்படுகிறது. |
| தீர்த்தம் | : | காவேரி தீரம் |
| மூலவர் | : | ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி |
| உற்சவர் | : | ஸ்ரீ ஸ்ரீனிவாசர் |
| தாயார் | : | ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவி |
| ஆகமம் | : | ஸ்ரீ வைகாநஸ ஆகமம் |
| விசேஷம் | : | மனநலம் பாதிக்கப்பட்டவர்கள் மற்றும் பில்லி சூனியக் கோளாறுகள் நிவர்த்தியாகிறது. |
| பூஜைகள் விபரம் | : | விஸ்வரூபம் - 6.30 a.m.<br>காலசந்தி - 8.30 a.m.<br>உச்சிகாலம் - 12.30 a.m.<br>திருமால்வடை - 5.30 p.m.<br>சாயரக்ஷை - 6.30 p.m.<br>அர்த்தஜாமம் - 8.30 p.m. |
| ஸேவை நேரம் | : | காலை 8.30 மணி முதல் மதியம் 1.00 மணி வரை<br>மாலை 4.00 மணி முதல் இரவு 8.30 மணி வரை |

பரம்பரை நிர்வாக டிரஸ்டி
ஸ்ரீ பிரஸன்ன வேங்கடசலபதி பெருமாள் திருக்கோயில் குணசீலம்
முசிறி வட்டம், திருச்சி மாவட்டம், பின்கோடு – 621 204
தொலைபேசி : 04326-275210, 275310

உ

ஸ்ரீ ராமஜெயம்

# ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் திருக்கோயில்

குணசீலம் - முசிறி வட்டம் திருச்சி மாவட்டம்

## முன்னுரை

ஸ்ரீய : பதியான ஸ்ரீமந்நாராயணன் பரம். வியூகம், விபவம் அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலைகளில் இருந்து உலகை படைத்து காத்து அருள்புரிகின்றார் என்பதை ஆகமங்களும், வேதங்களும் நமக்கு உணர்த்துகின்றன. இவ்வைந்து நிலைகளில் இக்கலியுகத்திலும் மானிடர்கள் எம்பெருமானைக் கண்ணாறக் கண்டு பக்தி செய்ய ஏதுவாய் அமைந்தது அர்ச்சாவதாரமாகும். ஸ்ரீவைகாநஸ ஆகம கூற்றுப்படி எம்பெருமானின் திவ்யமங்கள விக்ரஹரத்தை ஆராதிப்பதே உலகுக்கு நன்மைப் பயப்பதாகும் என ஸ்ரீவிகநஸாசார்யன் அறுதியிட்டு உபதேசித்துள்ளார். ஆழ்வார்களும் அர்ச்சாவதார விசேஷத்தை ஒவ்வொரு திவ்ய தேசங்களிலும் எழுந்தருளியுள்ள எம்பெருமானையும் போற்றி புகழ்ந்து தமது பாசுரங்களால் பாடி உறுதி செய்துள்ளார்கள்.

எம்பெருமான் அர்ச்சாவதாரமாய் எழுந்தருளியுள்ள திவ்ய தேசங்கள் பலவாகும். இவைகளுள் புராணபூர்வமாகவும் தேவர்களாலும் முனிவர்களாலும் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்தலங்கள் எண்ணற்றவை. முனிவர்கள் தமது கடும் தவ வலிமையால் பரம்பொருளான எம்பெருமானை நேரில் கண்டு கலியுக மக்களின் நன்மைக்காக அவர்கள் எளிமையாக எம்பெருமானை ஸேவித்த நொடியிலேயே பயன்பெரும் வகையில் விக்ரக ஸ்வரூபமாய் எம்பெருமானை எழுந்தருளச் செய்து அவ்வெம்பெருமானை ஆராதிப்பதினாலேயே வேண்டும் பலன்கள் அடையும் உபாயத்தை நமக்களித்துள்ளார்கள்.

அவ்வாறாக குணசீல மஹரிஷியின் தவத்தின் பயனாய் வைகுண்ட வாஸுதேவனே ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசனாக காட்சியளித்த அற்புத க்ஷேத்திரம் குணசீலம். பவிஷ்யோத்தர புராணத்திலே இந்த குணசீல க்ஷேத்திரத்தின் மகிமையானது குணசீலமஹாத்மியம் என்ற தலைப்பில் சொல்லப்பட்டுள்ளதால் இது புராண ஸ்தலமாகவே போற்றப்படுகிறது. இந்த குணசீல மஹாத்மியத்தை யாரொருவர் படித்தாலும், படிக்கக் கேட்டாலும் அவர்களது புண்ணியத்தை மூவுலகிலும் யாராலும் கணக்கிட இயலாது என சூதபுராணிகர் தமது சிஷ்யர்களுக்கு உறைக்கிறார். அப்புண்ணியம் மிகுந்த குணசீல மஹாத்மியத்தை நாமும் படித்து இகபர சுகங்களை பெறுவோமாக.

அடியேன்

குணசீலம் K.R. பிச்சுமணி அய்யங்கார்



# ஸ்தல வரலாறு

ஸ்ரீய:பதியான வைகுண்ட வாஸுதேவன் குணசீல மஹரிஷியின் தவத்திற்காக ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசனாக காட்சியளித்த அற்புத க்ஷேத்திரம் குணசீலம். திருச்சியிலிருந்து சேலம் செல்லும் நெடுஞ்சாலையில் திருச்சியிலிருந்து சுமார் 24 கிலோ மீட்டர் தொலைவில் காவிரி நதியின் அழகிய வடகரையில் அமைந்துள்ள இத்திருத்தலத்தில் எம்பெருமான், ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசன் என்ற திருநாமத்துடன் நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். சங்கம், சக்கரம், வரதஹஸ்தம், கடிஹஸ்தத்துடன் திருமார்பில் இலக்குமியைத் தாங்கி ஸேவை சாதிக்கும் எம்பெருமான் வலக்கையில் செங்கோல் ஏந்தியிருக்கிறார். இச்செங்கோலினாலேயே செய்வினை மற்றும் பில்லிசூனியக் கோளாறுகளை எம்பெருமான் நிவர்த்தி செய்வதாக ஐதீகம். ஆகவே மனநல பாதிக்கப்பட்டவர்கள் மற்றும் செய்வினை கோளாறுகளால் பாதிக்கப்பட்டவர்கள் இத்திருத்தலத்தில் 48 நாட்கள் தங்கி விரத முறைகளை மேற்கொண்டு காவேரி நதியில் நீராடி எம்பெருமானை வழிபட்டால் அவ்வினைகள் யாவும் நீங்கி சுகம் பெருகின்றனர். இதுவே இத்தலத்தின் தனிச் சிறப்பாகும்.

மேலும் திருப்பதி எம்பெருமானே இங்கு குணசீல மஹரிஷிக்கு காட்சியளித்ததால் திருப்பதிக்குச் சென்று தங்களது பிராத்தனைகளை செலுத்து இயலாதோறும் அந்த பிராத்தனைகளை இவ்வெம் பெருமானிடத்தில் செலுத்தி நிறைவு பெறுகின்றனர். இது கர்ண பரம்பரையாக நடைபெற்று வருகிறது. ஆகவே தென் திருப்பதி எனவும் இத்திருத்தலம் போற்றப்படுகிறது.

## குணசீல மஹாத்மியம்

தால்பிய மஹரிஷியின் சிஷ்யரான குணசீலர் நீலிவனம் எனப்படும் (தற்போது திருப்பைஞ்ஞீலி என அழைக்கப்படுகிறது) வனத்தில் அமைந்துள்ள ஆசிரமத்தில் குருநாதருக்கு பணிவிடைகள் செய்து கொண்டு வேதங்களையும், புராணங்களையும் நன்கு கற்றறிந்து வந்தார். ஒரு சமயம் தால்பியர் தமது சிஷ்யர்களுடன் இமயமலைக்குச் சென்று வியாசரை ஸேவித்து விட்டு பின் கங்கை

மற்றும் புனித நதிகளில் நீராடி தமது ஆசிரமம் திரும்பும்போது திருவேங்கடமலைக்குச் சென்று அங்கு மிகுந்த ஆச்சர்யத்துடன் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையானை ஸேவித்து நின்றார். திருவேங்கடமுடையானின் திவ்யலாவண்ய ஸ்வரூபத்தில் லயித்த குணசீல மஹரிஷியானவர் அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் தமது ஆசிரமத்திற்கு எழுந்தருள வேண்டினார். ஆனால் திருவேங்கடமுடையானோ தாம் இந்த கல்பம் முடியும் வரையில் திருமலையில் இருந்து அருள சங்கல்பம் கொண்டுள்ளதால் நீர் உமது ஆசிரமம் சென்று தவம் இயற்றினால் உமது எண்ணம் நிறைவேறும் இதற்கான உபாயத்தை உனது குருநாதரிடம் கேட்டுத் தெரிந்துக்கொள் என எம்பெருமான் திருவாய் மலர்ந்தருளினார்.

எம்பெருமானின் உத்தரவை தனது குருநாதரிடம் குணசீலர் தெரிவிக்க தால்பியரும் அதற்கான உபாயத்தை தெரிவித்தார். புராணத்தில் நடைபெறப் போவது யாவும் தெரிவிக்கப்பட்டுள்ளது. அவ்விதமே உனது தவத்தின் பயனாய் ஸ்ரீவைகுண்டவாஸுதேவன் காவிரியின் வடகரையில் அமைந்துள்ள உமது ஆசிரமத்திற்கு ஸ்ரீதேவியுடன் கூட எழுந்தருளப்போகிறார். ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசன் என்ற திருநாமத்துடன் இந்த கல்பம் முடியும் வரை திவ்யமங்கள விக்ரஹ ஸ்வருபனாய் எழுந்தருளியிருந்து பக்தா பீஷ்டத்தைபூர்த்தி செய்து கொண்டு நித்யவாஸம் செய்யப்போகிறார். ஆகவே நீர் உமது ஆசிரமம் சென்று தவம் இயற்றுவாயாக என ஆசி வழங்கினார்.

குணசீல மஹரிஷியானவர் மிகுந்த சந்தோஷத்துடன் தமது ஆசை நிறைவேறப் போவதான குதூகலத்துடன் குருநாதர் தால்பியரிடம் ஆசிபெற்று காவேரியின் கரையில் அமைந்துள்ள தமது ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார்.

அங்கு காவேரி நதியில் நீராடி ஸ்ரீவைகுண்ட வாஸுதேவனை மனதில் தியானம் செய்து தவம் இயற்றலானார். கோடைகாலத்தில் பஞ்சாக்னி மத்தியிலும், குளிர்காலத்தில் ஈர வஸ்திரத்துடனும், மழைக் காலத்தில் ஜலத்தில் நின்றுகொண்டும் கடுமையான தவம் மேற்கொண்டார். இவரது தவத்தை பார்த்து தேவர்கள் பயமடைந்தனர். இந்திரன் தமது பதவிக்கு ஆபத்து வருமோ என்று எண்ணி இடி, மழை, காற்று,

மின்னல் இவைகளாலும் வேறு பல வழிகளிலும் குணசீலரின் தவத்தை கலைக்க முற்பட்டான். ஆனால் இவைகளினால் குணசீலரின் தவத்தை கலைக்க இயலவில்லை. இந்திரன் முதலான தேவர்கள் குணசீலரின் தவம் குறித்து அறிய பிரம்மாவை வணங்கி நின்றனர். பிரம்மா தமது ஞான திருஷ்டியால் அறிந்து குணசீலர் வைகுண்ட வாஸுதேவனைக் குறித்து தவம் இயற்றுகிறார். தமது ஆசிரமத்திற்கு எழுந்தருளி நித்ய வாஸம் செய்ய வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் மிகவும் குதூகலத்துடன் தவம் இயற்றுகிறார். ஆதலால் உங்களால் அவருக்கு ஆக வேண்டியது ஏதுமில்லை நீங்கள் பயப்பட வேண்டாம் என பிரம்மா உரைத்தார். இதனைக் கேட்டு இந்திராதி தேவர்கள் பிரம்மாவை வணங்கி விடை பெற்றனர்.

பிரம்மாண்டங்களைத் தாண்டி விரஜா நதியின் அண்மையில் கோடி சூரிய பிரகாசத்துடன் கூடிய விமானத்தளங்களுடனும், ரத்தினங்களால் இழைக்கப்பெற்ற தூண்களுடனும் விளங்கும் ஸ்ரீ வைகுண்டத்தில் ஸனகாதி முனிவர்களாலும், நாரதரும் முனிவர்களும் போற்ற ஆதிசேஷன் மேல் ஸ்ரீதேவி, பூதேவிஸமேதராய் வீற்றிருக்கும் எம்பெருமான் ஸ்ரீவைகுண்ட வாஸுதேவன் தன்னையே எண்ணித் தவம் புரிந்து வரும் குணசீல மஹரிஷிக்கு காட்சியளிக்க எண்ணி ஸ்ரீதேவியுடன் கூட வேதரூபியான கருடன் மேல் ஆரோஹணிந்து வைகுண்டத்தை விடுத்து விரஜாநதியைத் தாண்டி ப்ரம்மாண்டங்களை அடுத்து மஹாமேருபர்வதத்தையும் இமயமலை, விந்தியமலை முதலிய பர்வந்தங்களை பார்த்துக்கொண்டு காவேரி நதியின் அழகிய கரையில் அமைந்துள்ள குணசீலரது ஆசிரமத்திற்கு எழுந்தருளினார்.

எம்பெருமானின் வருகையை முன்னமே அறிந்த பிரம்மா சரஸ்வதியுடன் கூட ஹம்ஸாரூடராகவும், சிவன் பார்வதியுடன் கூட ரிஷபாரூடராகவும் இந்திராதி தேவர்கள், ஸனகாதி முனிவர்கள், நாரதர் தும்புரு, கந்தர்வர்கள், கின்னரர்கள் கிம்புருஷர்கள், யக்ஷர்கள், ஸாக்கியர்கள், சாரணர்கள் முதலியவர்களும் தால்பியர் தமது சிஷ்யர்களுடனும் குணசீலராசிரமத்தில் குழுமியிருந்தனர்.

ஸ்ரீதேவியுடன் கூட வைகுண்ட வாஸுதேவன் தமது ஆசிரமத்திற்கு எழுந்தருளியது அறிந்த குணசீலரும் தவநிலையிலிருந்து மீண்டு கோடி

சூரிய பிரகாசத்துடன் மஹாமேருவின் மேல் ஒரு காளமேகம்போல் கருடாரூடராக காட்சியளிக்கும் ஸ்ரீவைகுண்டவாஸுதேவனை கண்ணாறக்கண்டு அவரது திருப்பாதக்கமலங்களில் நெடுஞ்சாணாய் கிடந்து வணங்கினார்.

எத்தனை ஜென்மம் எடுத்தாலும் கிடைக்கப்பெறாத அந்த அற்புதக் காட்சியைக் கண்டு அமுதம் பருகியவராய் குணசீலர் மெய் சிலிர்த்து நின்றார். பாபங்களைப் போக்கி மோட்சத்தை அளிக்கும் கமல பொற்பாதங்களையும், பதுமரேகை அங்குசரேகை, வஞ்சிர ரேகைகளால் சிவந்திருக்கப்பட்ட திருவடி இணையினையும், தண்டை, கொலுசு போன்ற ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கணுக்கால் களையும், பீதாம்பரம் தவழும் தொடையினையும், முத்து பவளம் வைரங்களால் இழைக்கப்பட்ட மணிமேகலை தவழும் இடையினையும், அண்டசராசரங்களையும் அடக்கி வைத்திருக்கும் திருவயிறும், கங்காவர்த்தனம் சுழித்தார் போன்ற நாபிக்கமலமும், ஸ்ரீவத்ஸமருவுருடன் கூடிய அழகிய திருமார்பும், பிரளம்பயஞ்யோபவீதம் தவழும் தோளும் சங்கு போன்ற கழுத்தும், அபயகரமும், மலர்ந்த தாமரை போன்ற முகத்தில், கொவ்வைக்கனி போலும், பவளம் போலும் சிவந்த வாய்த்தாமரையும், எள்ளின் புஷ்பத்தைப் போன்ற நாசியும், தாமரை இதழ்போன்ற கண்களும், அவற்றின் நடுவே மதுபானம் குடித்த வண்டுகள் போன்ற விழிகளும், கோதண்டத்திற்கு சமானமாய் திகழும் புருவங்களும், செவிகளில் குண்டலமும் நவரத்தினங்கள் இழைக்கப் பெற்ற கிரீடமும், கௌஸ்துபம், வனமாலை, தோள்வளை, ஹாரம் ஆகிய ஆபரணங்களை அணிந்தவராய் சங்கு, சக்கரம், வில், வாள், கதை ஆகிய பஞ்சாயுதங்களை ஏந்தியவராய், சுகந்த புஷ்ப பரிமள மாலைகளை தரித்தவராய், மூவுலகமும் பிரமிக்கத்தக்க மந்தகாசச் சிரிப்புடன் காட்சிதரும் வைகுண்ட வாஸுதேவனை பாதாதிகேசம் ஸேவித்து குணசீலர் மெய்மறந்து நின்றார். அவரைப் பார்த்து எம்பெருமான் நீர் விரும்பும் வரத்தைக் கேள் என திருவாய் மலர்ந்தார்.

குணசீலமஹரிஷியும், "எம்பெருமானே தமது ஸேவையைத் தவிர கேட்பதற்கு வேறு என்ன இருக்கிறது. இருப்பினும் பூவுலகோர் பயனுறும் வகையில் தாங்கள் கல்பம் முடியும்வரை, இந்த ஆசிரமத்தில் நித்ய வாஸம் செய்ய வேண்டும். தங்களை வந்து அண்டி வணங்கும்

பக்தர்கள் வேண்டும். வரங்களை தாங்கள் அருள்புரிய வேண்டும்" என வேண்டினார். அவ்வாறே ஸ்ரீவைகுண்ட வாஸுதேவனும் இந்த கலியுகம் முடியும் வரையில் குணசீல மஹரிஷியின் பிரார்த்தனைப்படி நித்ய வாஸம் செய்ய எண்ணம் கொண்டு கலௌ வேங்கடநாயக; என்றபடி கலியுக தெய்வமாய்த் திகழ ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனாக திவ்யமங்கள விக்ரஹஸ்வரூபனாய் சங்கு சக்கரம் வரதஹஸ்தம் கடிஹஸ்தம் உடையவராய், திருமார்பில் இலக்குமியைத் தாங்கி நின்ற திருக்கோலத்தில் காட்சியளித்தார்.

எம்பெருமானுடைய ஆவிர்பாவ காலம் க்ருதயுகம், புரட்டாசி மாதம் திருவோணம் நட்சத்திரம் சனிக்கிழமை மத்யான வேளை தனுர் லக்னம் கூடிய சுபதினத்தில் குணசீலமஹரிஷிக்கு ஸ்ரீவைகுண்ட வாஸுதேவன் ஸ்ரீ தேவியுடன் கூட எழுந்தருளி ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனாக காட்சியளித்ததாக கூறப்படுகிறது.

திவ்யமங்கள விக்ரஹ ஸ்வரூபனாய் எழுந்தருளிய ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசப் பெருமானை குணசீல மஹரிஷி எம்பெருமானுக்கு மிகவும் உகப்பான ஸ்ரீவைகாநஸதிவ்ய பகவத் சாஸ்திர முறைப்படி ஆராதனம் செய்யலானார். ஸ்ரீவைகநஸ பகவத் சாஸ்திரமானது ஸ்ரீவிகநஸர் என்ற முனிவரால் உபதேசிக்கப்பட்டது. அர்ச்சாவதாரமாய் எழுந்தருளி உள்ள எம்பெருமானுக்கு எவ்வாறு உபசாரங்கள் செய்வது அவருக்கான கோயிலை நிர்மாணம் செய்வது, உற்சவங்களை நடத்துவது முதலிய முறைகளை இந்த பகவத் சாஸ்திரமானது விரிவாக விளக்குகிறது.

## ஸ்ரீ விகநஸாசார்ய அவதாரம்

அண்டசராசரங்களை படைத்த எம்பெருமான் பிரம்மாவின் மூலம் உலகை சிருஷ்டித்தார். எம்பெருமானின் கருணை இல்லாதபடியால் உயிரினங்கள் யாவும் எந்த தேஜஸும் இல்லாமலும் பயினின்றியும் வாழ்வதைக் கண்ட எம்பெருமான் தமது க்ருபை அனைத்திற்கும் கிடைக்க எண்ணி தாம் அர்ச்சாவதாரமாய் பூவுலகில் எழுந்தருளப் போவதாகவும் அவ்வாறாக அர்ச்சாவதாரமாய் எழுந்தருளியுள்ள விக்ரஹங்களுக்கு உபசாரங்களைச் செய்து தனது அருளைப் பெறும் வழிகளை உபதேசிக்கும் ஒரு முனிச்ரேஷ்டரை படைக்க பிரம்மாவுக்கு ஆலணை பிறப்பித்தார். ஆனால் பிரம்மாவோ சாதாரண மனுஷ்ய

உயிர்களை மட்டுமே தம்மால் படைக்க இயலும் என்றும் தங்களை ஆராதிக்கும் முனிச்ரேஷ்டரை உருவாக்க இயலாது அதற்கு தாங்களே உபாயம் அளிக்க வேண்டும் என்று ப்ரம்மா எம்பெருமானிடம் முறையிட்டார்.

இது கேட்ட எம்பெருமான் தமது இதயத்திலிருந்து வேதாந்தத்தில் தோய்ந்தவராகவும், விஷ்ணு பக்தி மிகுந்தவராகவும் சிகை, யஞ்யோபவீதம் உடையவராகவும் திரிதண்டம் ஏந்தியவராகவும், கிரீடம், ஹாரம், தோள்வளை முதலிய ஆபரணங்கள் அணிந்தவராகவும், சங்கு சக்கரம் கமண்டலத்துடன் ஒரு பிரம்ம ரிஷியாக காட்சி தரும் விக நஸர் என்ற மாமுனியை தோற்றுவித்தார். ஸ்ரீவிகநஸருக்கும் பிரம்மாவுக்கும் ஒரே முகூர்தத்தில் உபநயனம் செய்து வைத்து ஒன்றரை கோடி க்ரந்தங்களை எம்பெருமானே உபதேசித்தார். ஸ்ரீவிகநஸர் அத்ரி, ப்ருகு பரத்வாஜார், கௌதமர் முதலிய முனிவர்களைப் படைத்தார். பிரம்மா, ஸனகர் ஸனந்தனர், ஸனத்குமாரர், ஸனாதனர் முதலியவர்களைப் படைத்தார்.

இவர்கள் அனைவரும் ஸ்ரீவிகநஸரையே ஆச்சார்யனாகக் கொண்டு வழிபட வேண்டும் என எம்பெருமான் ஆணையிட்டார். அதன்படி விகநஸர் எம்பெருமான் உபதேசித்த ஒன்றரை கோடி க்ரந்தங்களையும் தமது சிஷ்யர்களுக்கு உபதேசித்தார்.

எம்பெருமானின் நியமனப்படி வைகுண்டத்தை விடுத்து பூவுலகில் எழுந்தருளி நைமிசாரண்யத்தில் நரநாராயணரை ஸ்ரீவிகநஸர் ஆராதித்து வந்தார். அத்ரி, ப்ருகு, மரீசி காச்யபர் ஆகிய நால்வரும் ஸ்ரீவிகநஸாசார்யர் அருளிய ஸ்ரீவைகாநஸதிவ்ய பகவத் சாஸ்திர முறையினை பூவுலகோர் அறியச் செய்தனர்.

இந்த ஸ்ரீவைகாநஸ பகவத் சாஸ்தர முறையினை பின்பற்றுபவர்கள் வைகாநஸர்கள் என்றும் அவர்களுக்கு பதினெட்டு சமஸ்காரங்களையும் ஸ்ரீவிகநஸாசார்யர் விதித்துள்ளார். இந்த பதினெட்டு சமஸ்காரங்களையும் வாழ்க்கையில் கடைபிடித்து சதாசர்வ காலமும் எம்பெருமானின் திருவாராதனத்திலேயே ஈடுபடுவதால் ஸ்ரீ வைகாநஸன் தாமரை இலை நீர்போல் உலக இன்ப துன்பங்களிலிருந்து விலகி கடைசியில் ஸ்ரீவைகுண்டத்திலே எம்பெருமானுக்கு கைங்கர்யம் செய்யும் நித்யசூரிகளாய் திகழ்கிறான் என மரீசி மகரிஷி உரைக்கிறார்.

வேதங்கள் நான்காகப் பிரிவதற்கு முன்னமே தோன்றியதாலும் எம்பெருமானாலேயே ஸ்ரீவிகநஸருக்கு உபதேசிக்கப்பட்டதாலும் இந்த ஸ்ரீவைகாநஸ பகவத் சாஸ்திரமானது எம்பெருமானுக்கு ஆராதனம் செய்ய மிகவும் உகப்பானதாகும்.

ஸ்ரீவைகாநஸ ரிஷியான குணசீல மஹரிஷியும் தனது குருநாதர் தால்பியரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீவைகாநஸ திவ்ய பகவத்சாஸ்திர முறைப்படியே எம்பெருமானுக்கு க்ருத, த்ரேதார, த்வாபரயுகம் கடைசிவரை குறைவர திருவாராதனம் செய்து வந்தார். த்வாபரயுகம் கடைசியில் தனது குருநாதர் தால்பியரிடமிருந்து தீர்த்தசக்ரயாகம் செய்ய நைமிசாரண்யம் செல்ல அழைப்பு வந்தது. தமக்குப் பிரியமான ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசப் பெருமானை விட்டு பிரியவும் மனமில்லாமல் குருநாதரின் அழைப்பையும் நிராகரிக்க முடியாமல் குணசீலர் எம்பெருமானையே சரணடைந்து வேண்டினார்.

இந்த கல்பம் நிறைவுறும் வரை இத்தலத்தில் நித்யவாஸம் செய்வதாக சங்கல்பம் கொண்டுள்ள எம்பெருமான் குணசீலரின் பிரார்த்தனையை ஏற்று அவரை குருநாதருடன் செல்ல உத்தரவளித்தார். எம்பெருமானின் உத்தரவை ஏற்று குணசீலரும் தமது சிஷ்யன் ஒருவனை திருவாரதனத்திற்கு நியமித்து விட்டு எம்பெருமானை வணங்கி குருநாதருடன் நைமிசாரண்யம் சென்றார்.

குணசீலமஹரிஷியின் சிஷ்யரான சிறுவன் அவரது ஆணைப்படி எம்பெருமானுக்கு குறைவர திருவாராதனம் செய்து வந்தான். மிக அண்மையில் அமைந்துள்ள காவேரி நதியில் அடிக்கடி வெள்ளப்பெருக்கு ஏற்படுவதாலும் வனவிலங்குகளின் தொல்லையாலும் சிறுவன் ஆராதனம் செய்வதை விட்டுவிட்டு சென்று விடுகிறான். கலியுக மக்களின் நன்மைக்காக அர்ச்சாரூபமாக அவதரித்த எம்பெருமான் தன்னை முழுவதும் புற்றினால் மறைத்துக் கொள்கிறார்.

காலங்கள் பல கடக்கின்றன. எம்பெருமான் எழுந்தருளியுள்ள புற்று அமைந்துள்ள இடம் பலப்பல மாற்றங்களுக்குள்ளாகி அடர்ந்த புல்வெளியாக மாறியது. நிசுளாபுரியை தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தான் ஞானவர்மன் எனும் சோழ அரசன். (தற்போது

திருச்சி மாநகரில் உள்ள உறையூர் என்னும் நகரமே அக்காலத்தில் நிசுளாபுரி என அழைக்கப்பட்டது) அவ்வரசனின் கோசாலையானது எம்பெருமான் எழுந்தருளியுள்ள புற்றின் சமீபத்தில் அமைந்துள்ள கிராமமான பத்ரசக்ரம் எனும் இடத்தில் அமைந்திருந்தது (பத்ரசக்ரம் எனும் கிராமம் தற்போது குணசீலத்திற்கு மிக அருகாமையில் உள்ள கல்லூர் எனும் கிராமமாகும்).

பத்ரசக்ரத்தில் வசிக்கும் இடையர்கள் எம்பெருமான் எழுந்தருளி உள்ள புற்றின் அருகாமையில் உள்ள புல்வெளியில் மாடுகளை மேய்த்து அங்கேயே பால்கறந்து குடங்களில் நிரப்பி சிறிது இளைப்பாறிவிட்டு அரசனது அரண்மனைக்கு எடுத்துச் செல்வதை வழக்கமாக கொண்டனர்.

அப்போது ஒரு சமயம் பால் நிரம்பிய குடங்களில் உள்ள பால் மட்டும் மாயமாய் மறைந்து வெறும் குடங்களாயின. அரசனுக்கு யாது கூறுவது என இடையர்கள் திகைத்திருக்க அவர்களில் வயது முதிர்ந்த இடையர் ஒருவருக்கு அருள் ஏற்பட்டு "நான் தான் பிரஸன்ன வேங்கடேசன் இந்த புற்றில் வெகுகாலம் வசித்து வருகிறேன். இதனை உம்து அரசனிடம் தெரியப்படுத்துங்கள்" என உறைத்து நின்றார். அதனைக்கேட்ட இடையர்கள் அரண்மனைக்குச் சென்று அரசனிடம் நடந்தவைகளை தெரிவித்தார்கள்.

தமது தேசத்திற்கு எம்பெருமானே எழுந்தருளியிருக்கிறார் என்பதை அறிந்த அரசனும் மிகுந்த சந்தோஷத்துடன் உடன் பத்ரசக்ரம் செல்ல அனைவருக்கும் ஆணையிட்டான். அரசு தனது மந்திரி பரிவாரங்களுடனும் சதுரங்க சேனையுடனும் பத்ரசக்ரபட்டிண பிரயாணத்தை தொடங்கினான். எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் புற்றின் சமீபம் வருகையில் ஒரு பிராமணர் எதிர்பட்டதைக் கண்டு அவரை வணங்கி நின்றான். அவர் அரசனைப்பார்த்து இந்த புற்றை முழுவதும் பால்கொண்டு கரைப்பாயாக உனக்கு க்ஷேமம் உண்டாகும் என ஆக்ஞாபித்து மறைந்தார்.

இதனை எம்பெருமானே தமக்கு உணர்த்தியதாக மகிழ்ந்து ஆயிரமாயிரம் குடங்கள் பால் கொண்டு வர அரசன் ஆணையிட்டான். இடையர்கள் ஆயிரமாயிரம் குடங்களில் பாலைக் கறந்து தலையில்

சுமந்து வந்தனர். ஞானவர்மனும் அந்த பாலால் புற்று முழுவதையும் கரைத்தான். அந்தப்புற்றின் நடுவில் திவ்யமங்கள விக்ரஹஸ்வரூபனாய் ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசப் பெருமான் எழுந்தருளியிருப்பது கண்டு ஆனந்தம் கொண்டு அவருடைய திருப்பாத கமலங்களில் நெடுஞ்சாணாய் கிடந்து வணங்கினான். ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசப் பெருமான் ஞானவர்ம அரசனுக்கு பிரத்யஷயமாக காட்சியளித்தார்.

எத்தனை ஜென்மம் எடுத்தாலும் கிடைக்கப்பெறாத அந்த அற்புத ஸேவையைக்கண்டு ஞானவர்மன் மெய்சிலிர்த்து நின்றான். வாஸுதேவா, ப்ரத்யும்னா, சங்கர்ஷணா, அநிருத்தா என எம்பெருமானின் நாமங்களைச் சொல்லி போற்றினான்.

“அரசனே உமது பக்தியைக் கண்டு மெச்சுகிறேன் குணசீல மஹரிஷியின் தவத்தினை ஏற்று அவரது வேண்டுதலை நிறைவேற்றும் விதமாக, இந்த கல்பம் முடியும் வரை இத்திருத்தலத்தில் திவ்யமங்கள விக்ரஹராய் நித்யவாசம் செய்ய சங்கல்பம் கொண்டுள்ளேன். ஆகவே இவ்விடத்தில் எனக்கு ஒரு ஆலயம் அமைப்பாயாக குணசீல மஹரிஷியால் எமக்கு செய்விக்கப்பட்ட மிகச்சிறந்த ஆராதனை முறையான ஸ்ரீவைகானஸ பகவத் சாஸ்திர முறைப்படியே எமக்கு ஆராதனம் செய்ய வேண்டும். எனது சன்னதிக்கு வந்து என்னை வணங்கும் அனைவருக்கும் அவர்கள் வேண்டும் வரங்களை அருளப்போகிறேன். எனது சன்னதியில் வந்து விரதமிருப்போர் கன்னிகையை வேண்டுபவன் நல்ல கன்னிகையையும், சந்ததியை வேண்டுவோர் நல்ல சந்ததியையும், தனத்தை விரும்புவோர் தனத்தையும், உடல் உபாதைகள் உள்ளோர் அவைகள் யாவும் நீங்கி நலமும் பெறுவர். என்னை வணங்குபவன் ஒருபோதும் வருத்தமடைய மாட்டான். நீ உமது முன்னோர்களால் ஆளப்பட்ட பத்ரசக்ரம் என்ற இடத்தில் இருந்துகொண்டு என்னை அனுதினமும் வந்து வழிபடுவாயாக. முக்கியமாக சனிக்கிழமைகளில் நீ மட்டும் தனியாக வந்து என்னை வழிபடு” என எம்பெருமான் திருவாய் மலர்ந்தருளினார்.

எம்பெருமானின் உத்தரவுப்படியே மிகச்சிறந்த கலையம்சத்துடன் கூடிய ஆலயத்தை உருவாக்க அரசன் எண்ணினான். ஆனால் எம்பெருமானோ, எனக்கு தற்போது எளிமையான ஆலயத்தையே

அமைப்பாயாக கலியுகத்தில் ஐயாயிரம் வருடங்களுக்குப்பின் பக்தர்கள் எனது கைங்கர்யத்தில் ஈடுபட்டு ஆலயத்தை விரிவுபடுத்த உள்ளார்கள் அவர்களுக்கு புத்ர, பௌத்ராதிகளுடன், எல்லா நலன்களையும் அருள்புரிய உள்ளேன். உமது பத்ரசக்ரபட்டணத்தை நன்முறையில் சீர்படுத்தி அமைப்பாயாக என உத்தரவளித்தார்.

அதன்படியே ஞானவர்ம அரசனும் எம்பெருமானுக்கு மிக எளிய ஆலயத்தை அமைத்து ஸ்ரீவைகநஸர்களைக் கொண்டு மஹாசம்ப்ரோக்ஷணத்தையும் நடத்தி அவர்களுக்கு ஸ்வர்ணங்களையும், ரத்னங்கவையும் தானமாக வழங்கி அவர்களது ஆசியையும் பெற்றான். ஸ்ரீவைகாநஸ பகவத்சாஸ்திர முறைப்படி அனுதினமும் குறைவர திருவாராதனம் நடைபெறவும் ஏற்பாடுகளைச் செய்தான்.

எம்பெருமானின் உத்தரவுப்படி பத்ரசக்ர பட்டிணத்தை சீரமைத்து அங்கு மாளிகை அமைத்து அனுதினமும் எம்பெருமானை வழிபட்டு வந்தான். சனிக்கிழமைகளில் தனியாக வந்து எம்பெருமானை வணங்கினான். இந்நாட்களில் எம்பெருமானே அரசனிடம் நேரில் காட்சியளித்து அவனது ராஜ்ய பரிபாலம் குறித்தும், பக்தர்களின் வேண்டுதல்களையும் நிறைவேற்றும் விதமாகவும், அருள்வாக்கு மலர்ந்ததாக புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

ஞானவர்ம அரசனின் காலத்தில் ச்ருததேவன் என்பவருக்கு கண்பார்வை கிடைத்ததும், பகுவிராஜனின் முடத்தன்மை நீங்கியதும், தேவதாசன் என்ற ஊமை குழந்தை பேசியதும், பிருதுகீர்த்தி, காந்திமதி தம்பதியருக்கு புத்ரபாக்யம் ஏற்பட்டதும் எம்பெருமானின் பரம கருணையினாலேயே. எம்பெருமானின் நியமனப்படி ஒரு மண்டல காலம் அவர்கள் சன்னதியில் தங்கியிருந்து காவேரி நதியில் நீராடி ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசப் பெருமானை வழிபட்டதாலேயே கைவல்யமாக தங்களது வரங்களைப் பெற்றனர் என பவிஷ்யோத்ர புராணத்திலே தெரிவிக்கப்பட்டுள்ளது.

த்வாபரயுகம் நிறைவுறும் வரை உனது (ஞானவர்ம அரசன்) சந்ததியினராலும், கலியுகத்தில் ஸ்ரீவைகாநஸர்களால் முக்காலத்திலும் ஆராதிக்கப்பட்டு பக்தர்களுக்கு வேண்டும் வரங்களை அருளப்

போகிறேன்” என்ற எம்பெருமானின் வாக்குப்படி தற்போதும் ஸ்ரீவைகாநஸ ஆகம முறைப்படியே ஆராதனமும் நடைபெற்று வருகிறது.

கலியுகத்தின் முற்பகுதியில் வாழ்ந்த ஆந்திரத்தைச் சேர்ந்த மஹாஞானியான நாராயண தீர்த்தர் தமது தீராத வயிற்றுவலியால் அநேக க்ஷேத்திரங்களுக்குச் சென்று பாதயாத்திரையாக வரும்போது ஒரு சமயம் குணசீலக்ஷேத்திரத்தில் தங்கி ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசப் பெருமானை வணங்கி தமது வயிற்றுவலியை நீக்குமாறு பிராத்தித்தார். அன்று இரவு எம்பெருமான் கனவில் தோன்றி “உமது வயிற்றுவலி நீங்கப்பெறுவீர், நீர் காலையில் எழுந்து எதைக் காண்கிறீரோ அதனைப்பின் தொடர்ந்து சென்றால் உமக்கு அபயம் அளிக்கிறேன்” என திருவாய் மலர்ந்தருளினார்.

அதன்படி நாராயணதீர்த்தர் வயிற்றுவலி நீங்கப்பெற்றவராக காலையில் எழுந்தவுடன் ஒரு வராஹத்தைக் (வெள்ளைப்பன்றி) கண்டார் அதனைப் பின் தொடர்ந்து சென்றார். அது காவேரியின் கரையோரமாக சென்று பூபதிராஜபுரம் என்ற ஊரை அடைந்து அங்கு அமைந்துள்ள ஒரு புற்றினுள் சென்று மறைந்தது. அந்தப் புற்றினுள் எம்பெருமான் ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசன் காட்சியளித்தார். எம்பெருமானின் ஆஞ்யைப்படி அங்கு ஒரு ஆலயத்தை நிர்மாணித்தார். அந்த ஆலயத்தில் எம்பெருமானை பிரதிஷ்டை செய்து எம்பெருமானை கண்ணனாகவே பாவித்து பஜனைப் பாடல்களைப் பாடி வந்தார். கிருஷ்ணலீலா தரங்கிணி என்ற க்ரந்தத்தையும் எழுதி அதனை அனைவரையும் தோத்திரம் செய்யச் செய்து பகவானின் கருணையைப் பெற வழிவகை செய்தார்.

வராஹம் நுழைந்ததால் அந்த ஊர் வரகூர் என அழைக்கப் படலாயிற்று. நாராயணதீர்த்தரும் அநேக நதிகளில் நீராடி தீர்த்த யாத்திரை செய்து கடைசியில் திருப்பூந்துருத்தியில் ஒரு மாமரத்தினடியில் நிஷ்டையில் ஆழ்ந்ததாக வரலாறு கூறுகிறது. இவர் தமது தரங்க கீர்த்தனையான பாவயே ஹ்ருதயாரவந்தே என்ற ஸ்லோகத்தில்

**முனிமானஸானு கூல முரளீலோல – வினயாதி**
**குணசீல வேத புராணாதி மூல**

என்ற வரிகளில் குணசீலப் பெருமானை முரளீ லோலனாக பாவித்து அனுபவித்ததை நாம் அறிய முடிகிறது. இவ்வாறாக ஸர்வ ஜனாபீஷ்டத்தையும் பூர்த்தி செய்து கொண்டு குணசீலக்ஷேத்திரத்தில் நித்யவாஸம் செய்து அருள்பாலித்து வரும் ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசப் பெருமானின் பெரும் கருணையால் தங்கள் வேண்டுதல்களை கைவல்யமாகப் பெற்றோர்கள் கோடான கோடியாவர்.

அபயம் என்று தன்னை அண்டி வருபவர்களை குணசீலப் பெருமான் ஒருபோதும் கைவிடுவதில்லை. அவர்களை அரவணைத்து அருள்பொழிந்து ஆனந்தமயமான வாழ்வினை அருளுகின்றார். எவ்வாறு ஞானவர்ம அரசனின் காலத்தில் எம்பெருமானின் நியமனப்படி விரதமிருந்து ஒரு பகுவிராஜன் முடத்தன்மை நீங்கப் பெற்றானோ, ஒரு தேவதாசன் ஊமைத்தன்மை நீங்கப் பெற்றானோ, ஒரு ப்ருதுகீர்த்தி தம்பதியர் சத்புத்ரனைப் பெற்றனரோ அதைப் போலவே இப்போதும் விரதமுறைகளை மேற்கொண்டு குணசீலப் பெருமானை வணங்கி நின்றால் அவர்கள் வேண்டும் பலன்களை எம்பெருமானின் பரம கருணையாலே கைவல்யமாக பெற்றுச் செல்வதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

தற்போது உள்ள இயந்திரமயமான உலகில் மன அமைதி என்பது கிடைத்தற்கரிய ஒன்றாகிவிட்ட நிலையில் அதனை அருளுவதற்காகவே எம்பெருமான் கலியுக தெய்வமாய் இங்கே காட்சியளிக்கின்றார். தனது வலக்கையில் ஏந்தியுள்ள செங்கோலினால் தீராதவினைகளை விரட்டி சாஸ்வதமான சுகத்தை அருளுகிறார். மனநலம் பாதிக்கப்பட்டவர்கள் இங்கு ஒரு மண்டலம் தங்கி (48 நாட்கள்) அனுதினமும் காவேரி நதியில் நீராடி எம்பெருமானுக்கு நடைபெறும் ஆறுகால பூஜைகளிலும் தவறாமல் கலந்து கொண்டு மனமுருக பிரார்த்தித்து, அங்கு வழங்கப்படும் எம்பெருமானின் திருவருட்பிரஸாதங்களை உட்கொண்டு வந்தால் அவ்வினைகள் யாவும் நீங்கி சுகம் பெறுகின்றனர்.

விசேஷமாக மதியம் நடைபெறும் உச்சிகால பூஜையிலும், இரவில் நடைபெறும் அர்த்தஜாம பூஜையிலும் எம்பெருமானின் பாதோதக தீர்த்தம் எல்லோருடைய முகத்திலும் தெளிக்கப்படுகிறது. இதனால் சகல தோஷங்களும் நிவர்த்தியாகிறது.

மனநலம் பாதிக்கப்பட்டவர்கள் தங்கி வழிபட ஏதுவாய் மனநல மறுவாழ்வு மையம் ஒன்றும் திருக்கோயிலால் நிர்வகிக்கப்பட்டு வருகிது. இதில் மனநலம் பாதிக்கப்பட்டவருடன் அவரது நெருங்கிய உறவினர் ஒருவரும் தங்கி வழிபடும் வகையில் அனைத்து வசதிகளுடனும் கூடிய அறைகள் ஒதுக்கப்படுகிறது. மனநல மருத்துவ சிகிச்சையும் இலவசமாக வழங்கப்படுகிறது.

ஸ்ரீவைகாநஸ பகவத் சாஸ்திர முறைப்படியே அனுதினமும் எம்பெருமானுக்கு ஆறுகால பூஜைகள் விசேஷமாக நடைபெறுகிறது. திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு நடைபெறுவது போன்றே இங்கும் உற்சவங்கள் நடைபெறுகிறது. புரட்டாசி மாதத்தில் பதினோரு தினங்கள் ப்ரும்மோற்சவமும் சித்திரை மாத பௌர்ணமி தினத்தில் தெப்போற்சவமும், ஆவணிமாதத்தில் திருப்பவித்ரோத்ஸவமும், ஸ்ரீராமநவமி, ஸ்ரீஜெயந்தி, வைகாசிவிசாகம், கார்த்திகைதீபம், விஜயதசமி ஆகிய உற்சவங்களும், மார்கழிமாதம் முழுவதும் உஷட்கால பூஜைகளும் உத்தராயண, தக்ஷிணாயன புண்ணியகால விசேஷ பூஜைகளும் நடைபெறுகின்றன. மேலும் மாதந்தோறும் வரும் திருவோண நட்சத்திரமும், பிரதி வார சனிக்கிழமைகளும் விசேஷ நாட்களாகும்.

இங்கு பிரார்த்தனையாக எம்பெருமானுக்கு வேண்டிக் கொண்டு அங்கபிரதஷணம், அடிபிரதஷணம், முடி காணிக்கை செலுத்துதல், திருமஞ்சனம், சந்தனக்காப்பு, புஷ்பங்கி, கருடசேவை முதலியவைகளை செய்கின்றனர். குலதெய்வமாக வழிபடுவோர் மாவிளக்கு ஏற்றுகின்றனர். புரட்டாசி மாதம் நடைபெறும் ப்ரும்மோற்சவத்தில் திருத்தேரின் பின்தொடர்ந்து தேரோடும் வீதியில் பக்தர்கள் அங்க பிரதக்ஷணம் செய்வது வேறெங்கும் காணாத ஒரு பிரார்த்தனையாக இங்கு நிகழ்கிறது.

திருப்பதிக்கு சென்று தங்களது பிரார்த்தனைகளைச் செய்ய இயலாதோர் அந்த பிரார்த்தனைகளை இங்கு செலுத்தி நிறைவு செய்கின்றனர். ஆனால் குணசீலப் பெருமானுக்கு நேர்ந்து கொண்ட பிரார்த்தனையை வேறெங்கும் செய்யக்கூடாது அதனை இங்கேயே செய்ய வேண்டும் என்ற கூற்று கர்ணபரம்பரையாக சொல்லப்பட்டு வருகிறது.

இங்கு பெருமாளுக்கு ஒரு சன்னதி மட்டுமே உள்ளது வேறு சன்னதிகள் கிடையாது. மூலவர் எம்பெருமான் ஸ்ரீபிரஸன்ன வேங்கடேசன் என்ற திருநாமத்துடன் சங்கு, சக்கரம், வரதஹஸ்தம், கடிஹஸ்தம், சதுர்புஜத்துடன், இலக்குமியை மார்பில் தாங்கி நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறார். தனது வலக்கையில் செங்கோல் ஏந்தி இருப்பதால் செய்வினை கோளாறுகளை அகற்றுவதாக ஐதீகம். உற்சவர் ஸ்ரீனிவாசர் என்ற திருநாமத்துடனும் தாயார் ஸ்ரீதேவி, பூதேவி ஸமேதராய் ஸேவை சாதிக்கிறார். த்வாரபாலகர்கள், கருடன், விஷ்வக்ஸேனர், த்வஜஸ்தம்பம், பலிபீடம் ஆகியவை வைகாநஸ ஆகம முறைப்படியாக திருக்கோயிலில் அமைக்கப்பட்டுள்ளன.

இங்கு அமைந்துள்ள தீபஸ்தம்பத்தில் ஸ்ரீஆஞ்சநேயர் சேவை சாதிக்கிறார். க்ஷேத்திரபாலகர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு, எம்பெருமானுக்கு வேண்டுதல்களைச் செய்து முடிப்பவர்கள் கடைசியாக ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு வடைமாலை சாற்றுவது வழக்கமாக இருந்து வருகிறது.

இத்திருக்கோயிலின் நிர்வாகமானது பரம்பரை வழி வழி வரும் அர்ச்சகர்களாலேயே நிர்வகிக்கப்பட்டு வருகிறது. நித்ய பூஜைகளையும் உற்சவங்களையும் சிறப்பாக இவர்கள் நடத்தி வருவதைப் போன்றே திருப்பணிகளையும் மிகச்சிறப்பாக செய்து வருகின்றனர்.

1976ம் ஆண்டு பரம்பரை டிரஸ்டிகள் குழுவிற்கு தலைமை வகித்த காலம் சென்ற லு.ா. ரெங்கனாத அய்யங்கார் அவர்களின் பெரும் முயற்சியால் திருப்பணிக்குழு அமைக்கப்பட்டு நூதன ராஜகோபுரம் நிர்மாணிக்கப்பட்டு, பிரகாரங்கள் புனரமைக்கப்பட்டு, அலுவலக கட்டிடங்கள் புதிதாக கட்டப்பட்டு, சித்தவிடுதி, முடி செலுத்தும் இடம், யாத்திரிகர்கள் தங்கும் விடுதி, தெப்பக்குளம் சீரமைப்பு முதலிய பற்பல திருப்பணிகள் நிறைவு பெற்று மஹாசம்ப்ரோக்ஷணமானது நிகழ்த்தப்பட்டது.

தற்போது பரம்பரை டிரஸ்டிகள் குழுவால் முயற்சி மேற்கொள்ளப்பட்டு மேலும் பல திருப்பணிகள் செய்து ஆலயத்தை விரிவுபடுத்த எண்ணி, மிகவும் தாழ்வாக இருந்த எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் கர்ப்பக்கிரஹம், அர்த்தமண்டபம், மஹாமண்டபம் ஆகியவற்றை உன்னதமாக உயர்த்த முடிவு செய்தனர்.

கலியுகத்தில் ஐயாயிரம் வருடங்களுக்குப் பின்பே எனது சன்னதி விரிவடையும் எனது கைங்கர்யத்தில் பக்தர்கள் ஈடுபடப் போகிறார்கள் என்ற எம்பெருமானின் ஆஞ்ஞையை சிரமேற்கொண்டு, தற்போது நடைபெற்று வருவது 5104வது கலியுக வருடம் ஆகையால் எம்பெருமானிடம் உத்தரவு பெற்று சன்னதியை உன்னதமாக்க டிரஸ்டிகள் குழு முடிவு செய்தது.

ஸ்ரீ வைகநாஸ ஆகமமுறைப்படியான விசேஷ பூஜைகள் செய்யப்பட்டு எம்பெருமானின் பரிபூரண உத்தரவு கிடைக்கப் பெற்றதை அடுத்து திருப்பணிகள் துவங்கப்பட்டது. இத்திருப்பணியானது, ஸ்ரீ ஆதிசங்கராச்சார்ய பரம்பராகத் மூலாம்நாய ஸர்வக்ஞயபீட ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஜயேந்திரசரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ சங்கரவிஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் ஆசியுடன் தொடங்கப்பட்டு, முழுவதும் உபயதாரர்களைக் கொண்டு நிகழ்த்தப்பட்டது.

கர்பக்கிரஹம், அர்த்தமண்டபம், மஹாமண்டபம் ஆகியவை உன்னதப்படுத்த ஏதுவாக, மூலவர் எம்பெருமானை பாலாலய சன்னதியில் எழுந்தருளச் செய்ய திருக்கோயில் உள்பிரகாரத்தின் தென்கிழக்குப் பகுதியில் ஒரு சிறிய சன்னதி நிர்மாணிக்கப்பட்டது.

ஸ்ரீவைகாநஸ ஆகம முறைப்படியான யாகசால பூஜைகள் செய்யப்பட்டு 04.11.2001 அன்று மூலவர் எம்பெருமானை பாலாலய சன்னதியில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

தாழ்வாக இருந்த பழைய கர்பக்கிரஹம், அர்த்தமண்டபம், மஹாமண்டபம் ஆகியன முழுவதுமாக அகற்றப்பட்டு அஸ்திவாரத்தில் இருந்து நூதன ஆலயம் நிர்மாணிக்கப்பட்டது. இந்த நூதன ஆலயமானது முழுவதும் கருங்கல்லினால் சிற்ப சாஸ்திர முறைப்படியும், வைகாநஸ ஆகம முறைப்படியும் கலையம்சத்துடன் கூடியதாக வடிவமைக்கப்பட்டது. கர்பக்கிரஹம் அர்த்தமண்டபத்தின் வெளிச்சுவர்களில் பாலகிருஷ்ணன், நரஸிம்மன், வராஹன், யஞ்யநாராயணன், விஷ்ணுதுர்க்கை ஆகிய விக்ரஹங்கள் நேர்த்தியாக அமைக்கப்பட்டன. மஹாமண்டபத்தின் வேதத்தூணில் ருக், யஜுர், ஸாம, அதர்வண வேத மூர்த்திகளின் உருவமும் அற்புதமாக வடிவமைக்கப்பட்டுள்ளன. கருவறையின் மேல்பகுதி ஷட்கோணமாக அமைக்கப்பட்டு அதன் மேல்பகுதி

சந்தணமரத்தால் விதானம் அமைக்கப்பட்டது. ஏகதளமாக இருந்த விமானம் த்ரிதளவிமானமாக உயர்த்தப்பட்டு ஸ்வர்ணகலசம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அர்த்த மண்டப கதவு நிலைப்படிக்கு வெள்ளிக்கவசமும், மஹா மண்டப கதவு நிலைப்படிக்கு பித்தளை கவசமும் அணிவிக்கப்பட்டன. கருடன் சன்னதி, த்வஜஸ்தம்பபீடம், பலிபீடம் ஆகியன கருங்கல்லினால் வடிவமைக்கப்பட்டன. ஸ்வர்ணமயமான த்வஜஸ்தம்பமும், தீபஸ்தம்பமும் அமைக்கப்பட்டன.

ஸ்ரீ விகநஸாசார்யருக்கு கருங்கல்லினால் சிற்பசாஸ்திரப்படி தனி சன்னதியும் நிர்மாணிக்கப்பட்டது. பிரகாரங்கள் முழுவதும் அதிவிசாலமாகவும், அழகாகவும் புதிதாக நிர்மாணிக்கப்பட்டு தூண்கள் அணிவொட்டிக்கால் மண்டபத் தூண்களாக அலங்கரிக்கப்பட்டன. அங்கபிரதஷணம் பக்தர்கள் செய்ய ஏதுவாய் தளவரிசைக்கு கிரானைட் பொறுத்தப்பட்டது. எம்பெருமானுக்கு நூதனமாய் கண்ணாடிப் பள்ளியறையும் வாஹனமண்டபமும் அமைக்கப்பட்டன. மணிக்கதவு, பள்ளி:பறை முகப்பு, வாகன மண்டப நிலை ஆகியன மரவேலைப்பாடுகள் மிகுந்ததாகவும் அமைக்கப்பட்டன. திருமடப்பள்ளி, யாகசாலை ஆகியன புனரமைக்கப்பட்டன,

ஏகாந்தமண்டபம் ஒன்றும் புதிததாக நிர்மாணிக்கப்பட்டது. கோயிலின் முன்பகுதியில் தாலாட்டு மண்டபம் நிர்மாணிக்கப்பட்டது. குளங்கள் தூர்வாரப்பட்டு, விமான, ராஜகோபுரங்கள் வர்ணகலாபங்கள் செய்யப்பட்டு குணசீலப்பெருமானின் ஆலயத் திருப்பணியானது அவரது நியமனப்படி மகோன்னதமாக நடைபெற்று ஞானவர்ம அரசன் அன்று ஆயிரமாயிரம் குடங்கள் பால்கொண்டு புற்றைக்கரைத்து எம்பெருமானுக்கு கோயில் கட்டியதைப் போல் தற்போது நாமும் அந்த காட்சியைக் காண எம்பெருமான் சங்கல்பித்ததைப்போல் ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேச பாதுக ஸேவாஸமிதியால் 4.7.2004 அன்று திருச்சி உறையூரிலிருந்து பக்தர்கள் பாதயாத்திரையாக 10,008 குடங்கள் பால் கொண்டு வந்து எம்பெருமானுக்கு பாலாலய சன்னதியில் திருமஞ்சனம் செய்வித்தனர்.

எம்பெருமானின் திருவுள்ளப்படி 05.07.2004 அன்று மூலவர் எம்பெருமானை நூதன கர்பக்கிரஹத்தில் வைகாநஸ ஆகம முறைப்படி பிரதிஷ்டை செய்யப்பட்டது.

27.08.2004 அன்று விமான ராஜகோபுரங்களுக்கு மஹாசம்ப்ரோக்ஷணம் இனிதே நடைபெற்றது.

திருமதில்சுவர் கருங்கல்லினால் நிர்மாணிக்கும் திருப்பணியும், கல்யாண மண்டபமும், தங்கும் விடுதி, நந்தவனம் அமைப்பு, கோசாலை முதலிய திருப்பணிகளும் தொடர்ந்து மேற்கொள்ள பரம்பரை டிரஸ்டிகள் குழு முடிவு செய்துள்ளது.

குணசீலப் பெருமானைப் பற்றிய பாடல்களை தமிழில் எழுதி அதனைப் பலரும் கேட்டு அருள்பெறும் விதமாக ஒலி நாடாக்கள் வெளியிடப்பட்டுள்ளன. ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி புகழ்மாலை, ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேச சேவாம்ருதம் இவ்விரு ஒலி நாடாக்களிலும் உள்ள பாடல்களை இத்திருக்கோயிலின் பரம்பரை நிர்வாக டிரஸ்டி. திரு. K.R. பிச்சுமணி அய்யங்கார் அவர்கள் இயற்றியுள்ளார்கள்.

புண்ணிய நதியாம் காவேரியின் கரையில்
அமையப்பெற்றுள்ள இத்திவ்ய திருத்தலத்தில்
கோயில் கொண்டு அருள்மாரியைப் பொழியும்
கலியுகத்தின் கண்கண்ட தெய்வமாம்
ஸ்ரீபிரஸன்ன வேங்கடாசலபதிப் பெருமானின்
இணையடிகளை சரணடைந்து வணங்குவோருக்கு,
மின்னலென வரும் இன்னல், மேனிதனைத் தீண்டும்
துன்பம், முன்வினையின் பாவங்கள், இம்மைதனில்
வரும் இடர்கள் யாவும் தீயில் இட்ட பஞ்சாகி
நாளும் மேன்மைகள் அடைந்து நல்ல செல்வங்கள்
சூழ வாழும் வாழ்வில் மகிழ்ச்சி பொங்க
வீடுபேற்றையும் அடையலாம் என்பது
ஆன்றோர் மொழி.

ஆதலின் மனநலம் காக்க மண்ணுலகில் அவதரித்த அர்ச்சரூபியான ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசப் எம்பெருமானையும் தாயாரையும் ஒரு சேர ஸேவித்து இகபர சுகங்களைப் பெறுவோமாக.

**ஸத்யேன ப்ரதிலப்யாய துஷ்ட தூராயசார்ங்கிணே**
**குணசீலநிவாஸாய ஸ்ரீனிவாஸாயமங்களம்**
**வைகாநஸகுரொ : ராஸ்த்ர தர்சகாய மஹாத்மனே**
**குணசீல நிவாஸாய ஸ்ரீனிவாஸாய மங்களம்**

# அன்னதான திட்டம்

**1. இத்திருக்கோயிலில் தினமும் அன்னதானம் வழங்கப்படுகிறது. இதற்கு உபயம் வழங்குவோர் ரூ. 1200/- செலுத்தி அலுவலகத்தில் ரசீது பெற்றுக் கொள்ளலாம். மேலும் கட்டளை முதலீடாக ரூ. 18000/- அன்னதானத்திட்ட நிதியில் செலுத்தி அதன் வட்டியில் பிறந்தநாள், திருமணநாள் அல்லது கட்டளைதாரர் விரும்பும் விசேட நாளில் அன்றைய தினம் அன்னதானம் செய்யலாம். இவைகட்கான உபயதாரர்கள் வரவேற்கப்படுகிறார்கள்.**

**2. அன்னதானம் செய்ய விரும்புவோர் திருக்கோயில் சீட்டு விற்பனைக் கூடத்தில் தங்களால் இயன்ற குறைந்த பட்ச காணிக்கையினை செலுத்தி அன்னதான நன்கொடை ரசீது பெற்றுக் கொள்ளலாம். இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் அனுமதி மூ.மு.எண் 53727/04 எச். 3 நாள் 18.8.04ன் படி அன்னதான நன்கொடை சீட்டுகள் ரூ. 5, 10, 25, 50, 100, 500, 1000 ஆகிய ஏழு இனங்களில் அச்சிடப்பெற்று நன்கொடைகள் வசூலாகி வரப் பெறுகின்றது.**

**அன்னதானத்திட்டத்திற்கு உபயம் வழங்குவதற்கு** 80G(2) (a) (V) C.No : 6162E (123) CIT-1/Try/2002-2003-**ன்படி வருமானவரி விதிவிலக்கு உண்டு.**



பரம்பரை அறங்காவலர்கள் :

உயர்திரு. **A.S. வெங்கட்ராம அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **P.S. சீனிவாச அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **P.S. சந்தானம் அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **P.S. ராமமூர்த்தி அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **P.S. துரைசாமி அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **P.S. ராமமூர்த்தி அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **P.S. ரெங்கநாத அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **A.V. கிருஷ்ணமூர்த்தி அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **கே. சீனிவாசராகவ அய்யங்கார்** அவர்கள்

உயர்திரு. **R. துரைராஜ் அய்யங்கார்** அவர்கள்

பரம்பரை நிர்வாக அறங்காவலர் :

உயர்திரு. **K.R. பிச்சுமணி அய்யங்கார்** அவர்கள்



ஸ்ரீ விலக்ஷணானந்தர் திருவாய் மலர்ந்தருளிய

## ஸ்தோத்திரத் திருப்பதிகம்

1. திருவளருந் திருமார்புத் தெய்வ நோக்குந்
திரண்டெழுந்த நார்புயமுந் திகிரி சங்கும்
மறுமருவுந் துளபமணி மாலை மார்பும்
மங்கையுறு மார்பிடையில் மணி துலங்க
வருமுனிவன் குணசீலன் றவத்திர் காக
மாதவத்தின் சுடராகிப் பொன்னி மேய
வருமுதலே வேங்கடவ ஸ்ரீநிவாஸ
மலரடிக்கு எனதுமுடி வாழவம்மா.

2. குணங்கடந்த குணசீலன் பொன்னி நாப்பண்
குணமடக்கித் தவம்புரியா கொழுந்து போல
மணமலிந்த மாதவியால் வலப் பாதத்து
மந்தார முகினிறத்து மலையே மூள்ளான்
கணமலிந்த வடியார்கள் சூழ வந்து
காட்சியளித் தூய்வித்த ககன வீச
அனைமீது வரவிணையிற் பல்ளிகொள்ளு
மச்சுதனே நினது பதம் பணிந்திட்டேனே.

3. பாகாந்த மொழி மடவா ராசை நீக்கிப்
பற்றறுத்து ல்ளகமடக்கிப் பதிவு கொண்டு
சாகாத கல்வி கொடு குணசீலன்றான்
தவம்புரிய மனமிரங்கி வேங்கடேசன்
ஓகார மொழிகொடு நல்லுவண மேறி
ஆகாய மகாராசன் புதல்வி கேள்வ
ணடியினையி லனவரத மிறஞ்சுகேனே.
ஒய்யாரமான நடைப் பொன்னி யுற்று

4. மண்ணளந்து விண்ணளந்து மனத்தைமாய்த்து
மாவலியைப் பாதளத்தி லழுத்துவிட்டுக்
கண்ணளந்து வேங்கடத்இன் கமலமேய
காரணனார் குணசீலன் றவத்திற் காகப்
பெண்ணளந்த பெருமானும் பிரமன்றானும்
பேசரிய முனிக்கணங்க ளமரர் சூழ

எண்ணளந்த வெம்பெருமான் கோலத்தோடு
மெழுந்தருளி நின்றவன்றா ளெனக்காமம்மா.

5. கண்ணாயிரத்துடையோன் றடைசெய்தாலும்
கலங்காத குணசீலன் கலியை வென்று எண்ணாத
நினைவறுத்த வேக மெய்தி
இருந் தவத்தி லிருந்த குணசீல மன்னன்
உண்ணாக்கி னடிச் சென்று உச்சியேறி
உரகபட மீதமர்ந்த வொருவன் றன்னை
அண்ணாந்த காவிரியின் வடபாற்கண்டு
அதுவதுவா யானவவன் பெருமையென்ன.

6. கண்டேனின் றிருவடியைக் கமலக் கண்ணைக்
கரியதிரு மேனிமிசை மின்னல் போலக்
கொண்டேனென் மரகதத்தை யிளைடாடன்னைக்
கொண்டல் படிந் தமுதமெனக் கரியமேகம்
விண்டோய்ந்த நாற்புறமும் விளைந்தசங்கும்
விரிந்தகண்ட காவிரியின் வடபாற் றேன்றி
மண்டோய்ந்த குணசீலன் முன்னின் றாண்டாய்
மாதவனே நினது திருவடி கண்டேனே.

7. ஆரணமு மாமகமும் புகலவொண்ணா
வருந்தவமே யேழுமலை வாழுமீச
காரணமே கஞ்சனைமுன் குத்தி வீழ்த்திக்
காசினியை யுய்வித்த கமலக் கண்ணா
நாரணனே குணசீலம் பிறவி தீர
நற்பொன்னி வடகரையிற் றுலங்கி நின்றாய்
புரணமே புண்ணியமே நினது பாதப்
பொருப்பிடையே யெனது மனம் புகுந்தவாறே

8. ஆசையெல்லாம் விட்டொழித்தே னனைத்தும் வேண்டேன்
அனந்தன் மலைப் பெருமானே வேங்கடப்பேர்
மாசில்மணி மறைபொருளே துரிய வாழ்வே
மாதவனே மூவடிவா யிலங்குஞ் சொதி
காசியினிற் சீவருக்குப் பவரோ கத்தைக்
கழித்திடவு நினைத்தவர மனிக்க நேர்ந்ததும்

ஈசனென வடிவுகொடு குணசீலற்கா
யெழுந்தருள மெம்மானைக் கண்டேனின்றே.

9. அஞ்சஞ்சு மேழெட்டு மறுபான் மூன்றாம்
அவதாரம் பத்துடனே தள்ளி யம்பால
விஞ்சுமதி கைநிறுத்தி நிஷ்டை கூடி
விளங்குகின்ற விலாசமதில் ஸ்ரீநிவாஸன்
கொஞ்சுமொழி ஸ்ரீதேவி தனையுங்கண்டு
குணசீலன் றவம்புரிந்த கூர்மை காண
மஞ்சுபடி திருமலையி னின்றெழுந்த
மாதவநின் திருவடிக்கா ளாகின்றேனே.

10. அஞ்சுகத்தி னருஞ்சீடன் குணசீலன் பே
ரருந்தவத்தோன் காவிரியின் வடபாற்கொன்றை
நஞ்சுடையோன் சூதமரத் தடியிற் றங்கி
நாளாறு தத்துவமு நலியத் தாண்டிக்
கொஞ்சுமொழி மாதாவி னடிப ணிந்து
கொண்ட லெழு மாதவனை யுளந் திருத்தி
விஞ்சு தவஞ் செய்திட்ட வியப்பிற்காக
விளங்கிவரு வேங்கடவ வணங்கினேனெ.

11. அண்டமொலாங்கிடுகிடுத்து விழுந்திட்டாலும்
அமரமுனி தேவரெலா மழிந்திட்டாலும்
கொண்டலிடிப்புவியில் வீழ்ந்திட்டாலும்
குணங்கலங்காக் குணசீல முனிவற் காகப்
பண்டெழுந்த பரமேசன் வேங்கடத் தான்
பதிகமிதை விலக்ஷணா னந்த னென்பான்
குண்டலியை நிந்றெழுப்பிக் கவிதை செய்தான்
குணநீத பரமாத்த முனிவன்றானெ.

## வாழித் திருநாமம்

வைகுந்தநாதன் வாழி வடமலைப் பெருமான் வாழி
கைவந்த குணசீலப்பேர்க காவிரி நதியும் வாழி
பொய்யொழிந்த தருளே கொண்ட புண்ணயவடியார் வாழி
செய்ய வேங்கடவன் வாழி ஸ்ரீதேவி வாழி வாழி
ஓம் தத் ஸத்

# கோவிந்த நாமாவளி ஸ்தோத்திரம்

1. பக்த ஜனப்ரிய கோவிந்தா
பங்கஜலோசன கோவிந்தா
பக்தஜன ப்ரிய பங்கஜ லோசனா
பரமானந்த கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

2. மத்ஸ்ய களேபர கோவிந்தா
கச்சப பாலக கோவிந்தா
மத்ஸ்யகளேபர கச்சப பாலக
ஸ்ரீவத்ஸாங்கித கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

3. த்ருடிகிடி மூர்த்தே கோவிந்தா
ஹ்ருத ஜகதார்த்தே கோவிந்தா
த்ருடிகிடி மூர்த்தே ஹ்ருத ஜகதார்த்தே
கிருத சுப கீர்த்தே கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

4. நரஹரி விக்ரஹ கோவிந்தா
நமிதானுக்ரஹ கோவிந்தா
நரஹரி விக்ரஹ நாமிதானுக்ரஹ
ஹரிபுத விக்ரஹ கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

5. வாமந மூர்த்தே கோவிந்தா
பாவந கீர்த்தே கோவிந்தா
வாமந மூர்த்தே பாவந கீர்த்தே
மோஹன மூர்த்தே கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

6. பர்க்க முகாஸ்ரித கோவிந்தா
கர்க்கநிஷேவித கோவிந்தா
பர்க்க முகாச்ரித கர்க்கநிஷேவித
பார்க்கவ ராமா கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

7. தசரத நந்தன கோவிந்தா
தசமுக மர்த்தன கோவிந்தா
தசரத நந்தன தசமுக மர்த்தன்
சதமக ஸேவித கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

8. ஸீரவராயுத கோவிந்தா
வாரிஜலோசன கோவிந்தா
ஸீரவராயுத வாரிஜலோசன
காருண்ய புருஷா கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

9. வ்ருஷ்ணி குலேஸ்வர கோவிந்தா
க்ருஷ்ண க்ருபாலய கோவிந்தா
வ்ருஷ்ணி குலேஸ்வர க்ருஷ்ண க்ருபாலய
வ்ருஷ்டி நிரோதக கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

10. வஸுதேவாத்மஜ கோவிந்தா
வாஸவ மதஹந் கோவிந்தா
வஸுதேமாத்மஜ வாஸவமநஹந்
வஸுதாவல்லப கோவிந்தா
ஹரி நராயாண கோ. பஜ நாராயண கோ

11. கமலாவல்லப கோவிந்தா
கமலவிடலாசன கோவிந்தா
கமலாவல்லப கமலவிலோசன
கலிமலலோபன கோவிந்தா
ஹரி நாராயண கோ. பஜ நாராயண கோ

12. சக்ர-கதா-தர கோவிந்தா
ஸ்க்ர நிஷேவித கோவிந்தா
சக்ர-கதா-தர ஸ்க்ரநிஷேவித
நக்ரமதாபஹ கோவிந்தா
ஹரி நாராயண கோ. பஜ நாராயண கோ

13. துஷ்க்ருத நாஸன கோவிந்தா
ஸத்குலபாலக கோவிந்தா

துஷ்க்ருத நாசன ஸத்குலபாலக
கல்கி சரீரா கோவிந்தா
ஹரி நாராயண கோ. பஜ நாராயண கோ

14. நீரஜலோசன கோவிந்தா
நீரதமேகக் கோவிந்தா
நீரஜலோசன நீரதமேசக
நாரத ஸேவித கோவிந்தா
ஹரி நாராயண கோ. பஜ நாராயண கோ

15. நந்தகுமாரக கோவிந்தா
ப்ருந்தாவநாச கோவிந்தா
நந்தகுமாரக ப்ருந்தாவநாச
வந்திதஜனபா கோவிநதா
ஹரி நாராயண கோ. பஜ நாராயண கோ

16. நிஸ்சல நிஷ்கல கோவிந்தா
நித்யநிராமய கோவிந்தா
நிஸ்சல நிஷ்கல நித்ய நிராமய
நித்யநிரூபித கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

17. கல்மஷநாஸன கோவிந்தா
ஜன்மவிநாஸன கோவிந்தா
கல்மஹஷநாஸன ஜன்மவிநாஸன
ஸத்மய சின்மய கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

18. ராம ரகூத்தம கோவிந்தா
ராம ப்ருகூத்தம கோவிந்தா
ராம ரகூத்தம ராமப்ருகூத்தம
ராம யதூர்த்தம கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

19. ஸீதாவல்லப கோவிந்தா
ராதாவல்லப கோவிந்தா
ஸீதாவல்லப ராதாவல்லப

பாமாவல்லப கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

20. லக்ஷ்மீவல்லப கோவிந்தா
லக்ஷ்மண பூர்வஜ கோவிந்தா
லக்ஷ்மீவல்லப லக்ஷ்மண பூர்வஜ
பக்ஷிவராஸத கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

21. உக்ர பராக்ம கோவிந்தா
விக்ரபூஷண கோவிந்தா
உக்ர பராக்ரம விக்ரஹபூஷண
ஸூக்ரீவப்ரிய கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

22. ஸ்ரீவத்ஸாங்கித கோவிந்தா
கோவத்ஸப்ரிய கோவிந்தா
ஸ்ரீவத்ஸாங்கித கோவத்ஸப்ரிய
கோவர்த்தன தர கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

23. கேசவ மாதவ கோவிந்தா
மாதவ கேசவ கோவிந்தா
சேசவ மாதவ மாதவ கேசவ
காளிங்க நர்த்தன கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

24. ஹரமே துரிதம் கோவிந்தா
குருமே குசலம் கோவிந்தா
ஹரமே துரிதம் குருமே குசலம்
பவமே ஸரணம் கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

25. வெங்கடரமணா கோவிந்தா
ஸங்கடஹரணா கோவிந்தா
வெங்கடரமணா ஸங்கடஹரணா

லக்ஷ்மீரமணா கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

26. அநாத ரக்ஷக கோவிந்தா
ஆபாத்பாந்தவ கோவிந்தா
அநாத ரக்ஷக ஆபத்பாந்தவ
ஆர்த்தி வபஞ்ஜன கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

27. தீநஸூபந்தோ கோவிந்தா
பரமதயாளோ கோவிந்தா
தீனஸூபந்தோ பரமதயாளோ
பக்தஸூவத்ஸல கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

28. ஆஸ்ரித வத்ஸல கோவிந்தா
விஸ்ருத கீர்த்தே கோவிந்தா
ஆஸ்ரித வத்ஸல விஸ்ருத கீர்த்தே
ஸர்வ ஸரண்ய கோவிந்தா
ஹரி நாராயண கோவிந்தா பஜ நாராயண கோவிந்தா

சுபம்

ஸ்ரீ:

## ஸ்ரீ மஹாலஷ்மி அஷ்டகம்

நமஸ்தேஸ்து மஹாமாயே
ஸ்ரீபீடே ஸூரபூஜிதே
ஸங்க சக்ர கதாஹஸ்தே
மஹாலஷ்மி நமோஸ்துதே. 1

நமஸ்தே கருடருடே
டோலாஸூரபயங்கரி
ஸர்வபாப ஹரே தேவி
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 2

ஸர்வஜ்ஞே ஸர்வ வரதே
ஸர்வதுஷ்ட பயங்கரி
ஸர்வதுக்க ஹரே தேவி
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 3

ஸித்தி புத்தி ப்ரதே தேவி
புக்தி முக்தி ப்ரதாயிநி
மந்த்ர முர்த்தே ஸதா தேவி
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 4

ஆத்யந்த ரஹிதே தேவி
ஆதி ஸக்தி மஹேஸ்வரி
யோகஜ்ஞே யோகஸம்பூதே
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 5

ஸத்தூல்ஹூக்ஷ்மமஹாரௌத்ரே
மஹா ஸக்தி மஹோதரே
மஹா பாப ஹரே தேவி
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 6

பத்மாஸன ஸ்த்திதே தேவி
பரப்ரஹ்ம ஸ்வரூபினிணி
பரமேஸி ஜகன்மாதா :
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 7

ஸ்வேதாம்பரதரே தேவி
நாநாலங்காரபூஷிதே
ஜகத்ஸ்திதே ஜகன்மாத :
மஹாலக்ஷ்மி நமோஸ்துதே 8

மஹாலக்ஷ்ம்யஷ்டகம் ஸ்தோத்ரம்
ய : படேத் பக்திமான் நர :
ஸர்வஸீத்திமவாப்னோதி
ராஜ்யம் ப்ராபனோதி ஸர்வதா : 9

ஏககாலே படேன் நித்யம்
மஹாபாப விஊாஸனம்
த்விகாலே ய : படேன் நிந்யம்
தனதான்ய ஸமன்வித : 10

திரிகாலம் ய : படேன் நித்யம்
மஹாஸத்ரு விநாஸனம்
மஹாலக்ஷ்மீர்பவேன் நித்யம்
ப்ரஸந்த வதநா ஸூபா. 11

ஸ்ரீ :

# அ/மி. பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் திருக்கோயில்,

குணசீலம், முசிறி வட்டம், திருச்சி மாவட்டம் - 621 204

## மனநல மறுவாழ்வு மையம்

## திறப்பு : 31-10-2003



திருச்சி மாவட்டம், முசிறி வட்டம், குணசீலம்,
ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் திருக்கோயில்
மனநல மறுவாழ்வு மையக் கட்டிடம்

தொழிலதிபர் டாக்டர் **ப. சிவந்தி ஆதித்தனார்** அவர்களால்
உபயமாக வழங்கப்பட்டு
தமிழ்நாடு அரசு ஊனமுற்றோர் நலத்துறை சிறப்பு ஆணையர் அவர்கள்
அனுமதியுடன் 31-10-2003 அன்று
இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர்
மாண்புமிகு **P.C. இராமசாமி** அவர்களால் திறந்து
வைக்கப்பட்டது. இம்மையத்தில் பாரம்பரிய வழிபாட்டு முறையுடன்
மனநல மருத்துவ சிகிச்சையும் இலவசமாக வழங்கப்படுகிறது.
தமிழகத்தில் உள்ள திருக்கோயில்களிலேயே முதன்முதலாக அரசு
அனுமதியுடன் செயல்படும் மனநலமறுவாழ்வு மையம் இதுவேயாகும்.

ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி ஸ்வாமி திருக்கோயிலின் பரம்பரை நிர்வாக டிரஸ்டிகளின் பெயர்களும், பதவிக்காலங்களும் பின்வருமாறு :

உயர்திரு. **A.S. வெங்கட்ராம அய்யங்கார்** அவர்கள்
**5.2.1933 to 17.11.1934**

உயர்திரு. **P.T. கிருஷ்ணசாமி அய்யங்கார்** அவர்கள்
**18.11.1934 to 10.7.1937**

உயர்திரு. **A.S. வஸந்த கிருஷ்ணய்யங்கார்** அவர்கள்
**10.9.1937 to 9.3.1940**

உயர்திரு. **P.T. சீனிவாசய்யங்கார்** அவர்கள்
**10.3.1940 to 20.4.1942**

உயர்திரு. **A. கிருஷ்ணசாமி அய்யங்கார்** அவர்கள்
**20.4.1942 to 5.8.1945**

உயர்திரு. **P.T. சீனிவாசய்யங்கார்** அவர்கள்
**10.8.1945 to 27.2.1948**

உயர்திரு. **A.S. கோபாலகிருஷ்ணய்யங்கார்** அவர்கள்
**28.2.1948 to 6.8.1949**

உயர்திரு. **P.S. சீனிவாச அய்யங்கார்** அவர்கள்
**7.8.1949 to 8.8.1952**

உயர்திரு. **K.V. ரெங்கனா தய்யங்கார்** அவர்கள்
**8.8.1952 to 9.9.1956**

உயர்திரு. **P.S. ரெங்கனாதய்யங்கார்** அவர்கள்
**10.9.1956 to 30.6.1961**

உயர்திரு. **A.S. கிருஷ்ணமூர்த்தி** அவர்கள்
**1.7.1961 to 27.8.1961**

உயர்திரு. **K.V. ரெங்கனா தய்யங்கார்** அவர்கள்
**28.8.1961 to 26.11.1978**

உயர்திரு. **A.K. ராஜகோபால அய்யங்கார்** அவர்கள்
**27.7.1978 to 26.11.1984**

உயர்திரு. **P.S. ரெங்கனாதய்யங்கார்** அவர்கள்
**27.11.1984 to 31.8.1990**

உயர்திரு. **P.S. ராமமூர்த்தி அய்யங்கார்** அவர்கள்
**1.9.1990 to 31.8.1992**

உயர்திரு. **A.K. ராஜகோபால அய்யங்கார்** அவர்கள்
**1.9.1992** முதல்

ஸ்ரீ :

# ஸ்ரீ பிரசன்ன வேங்கடாஜலபதி பெருமாள் திருக்கோயில்

முசிறி வட்டம், திருச்சி மாவட்டம் - 621 204
தொலைபேசி எண் : 954326 - 275310
கோயில் அலுவலகம் : 954326 / 275610 மனநல மறுவாழ்வு மையக்கட்டிடம்

**மனநல மறுவாழ்வு மையத்தில் உள்ளிருப்போர் (மனநலம் பாதிக்கப்பட்டோர்) சேர்ப்பதற்கான விதிமுறைகள் விபரம் :**

1. மனநல மறுவாழ்வு மையத்தில் சேர விரும்புவோர் கீழ்க்காணும் சான்றிதழ்களுடன் நேரில் வந்து, விண்ணப்பபடிவம் திருக்கோயிலின் அலுவலகத்தில் பெற்று பூர்த்தி செய்து சான்றிதழ்களை இணைத்துக் கொடுக்க வேண்டும்.

   1. தனது இருப்பிட சான்றிதழ் (Nativety Certificate) கிராம நிர்வாக அலுவலரிடம் பெற வேண்டும்.

   2. மனநல மருத்துவர் சான்றிதழ் – யாரேனும் ஒரு மனநல மருத்துவரிடம் பெறலாம்.

2. மேற்படி மையத்தில் சேரவிரும்புவோருடன் அவருக்கு துணையாக அவரின் உறவினர் அல்லது நெருங்கிய குடும்ப நண்பர் கட்டாயம் மையத்தில் தங்கவேண்டும். துணை யாருமில்லாமல் கட்டாயம் உள்ளிருப்போரை சேர்க்க இயலாது.

3. மனநல மறுவாழ்வு மையத்தில் உள்ளிருப்போர், துணையிருப்போர் இருவரைத் தவிர மற்ற யாரையும் எக்காரணங்கொண்டும் உள்ளே அனுமதிக்கப்படமாட்டார்கள்.

4. மனநல மறுவாழ்வு மையத்தில் தங்குவோரின் உடை மற்றும் உணவு வசதிகள் அவரவர்களின் சொந்தப் பொறுப்பே ஆகும். திருக்கோயில் நிர்வாகம் எக்காரணத்தாலும் பொறுப்பேற்காது.

5. மனநல மறுவாழ்வு மையத்தில் உள்ளிருப்போர், தெய்வாதீனமாக காயமடைதல் போன்ற எந்த அசாதாரண நிகழ்ச்சி ஏற்பட்டாலோ, தப்பி ஓடி விட்டாலோ, எதிர்பாரா இயற்கை மரணம் ஏற்பட்டாலோ திருக்கோயில் நிர்வாகம் பொறுப்பேற்காது.

6. மேற்படி மைய்த்தில் உள்ளிருப்போர்களை அன்றாடம் காலை, மாலை குளியல் செய்விக்க ஆற்றிற்கு அழைத்துச் செல்லப்பட்டு ஐந்துகால பூஜைக்கும் திருக்கோயிலுக்கு அழைத்துச் செல்லப்படுவார்கள்.

7. மேற்படி மையத்தில் சேர்ந்துள்ளவர்கள் அன்றாடம் திருக்கோயிலில் நடைபெறும் ஜபயோகத்திட்டத்தில் தவறாமல் சேர்ந்து பயன் பெறவேண்டும்.

8. மனநல மறுவாழ்வு மையத்தில் சேர்ந்தோர், உடனிருப்போர், சமூகப் பணியாளர் மற்றும் மனநல மருத்துவரின் அறிவுரைகளை தவறாமல் பின்பற்றி நடக்க வேண்டும்.

9. மனநல மறுவாழ்வு மையத்தில் உள்ள கழிவறை, குளியலறை, சமையலறை வசதிகளை நல்லமுறையில், பாதுகாப்பான முறையில் துணையிருப்போர் வைத்துக் கொள்ள வேண்டும்.

10. மேற்படி மையத்தில் உள்ளிருப்போரை சுத்தமாகவும், சுகாதார முறையிலும் வைத்துக் கொள்வதோடு துணையிருப்போரும் அதைக் கடைப்பிடிக்க வேண்டும்.

11. மேற்படி மையத்தில் உள்ளிருப்போர், துணையிருப்போர் விரதம் போல் அன்றாடம் இருந்து, தெய்வ வழிபாட்டினையும் தவறாமல் மேற்கொண்டால் சாலச்சிறந்ததாக இருக்கும்.

12. மேற்படி மையத்தில் செலுத்தப்படும் கட்டண விதிகளில் யாருக்கும் எந்தவித பாகுபாடும் செய்ய இயலாது.

13. இதர விதிகள், நிபந்தனைகள் அலுவலகத்தில் கேட்டு அறியலாம்.

இவண்

**K.R. பிச்சுமணி அய்யங்கார்**

பரம்பரை நிர்வாக டிரஸ்டி

---

**உற்சவங்கள் :**

1. சித்திரை மாதப்பிறப்பு
2. தெப்ப உற்சவம்
3. விசாகம்
4. ஸ்ரீ ஜெயந்தி
5. ஆவணி அவிட்டம்
6. திருப்பவித்ரோத்ஸவம்
7. விக்னஸ ஆச்சார்ய உற்சவ ததியாராதனை
8. புரட்டாசி சனிக்கிழமைகள் ஐந்து
9. ப்ரும்மோற்சவம் பதினோரு நாட்கள்
10. தீபாவளி
11. திருக்கார்த்திகை
12. தனூர் மாதம்
13. கூடாரவல்லி
14. ஸ்ரீவைகுண்ட ஏகாதசி
15. தை சங்கராந்தி
16. பங்குனி உத்திரம்
17. திருவோணம் (மாதாந்திரம்) வருடத்தில் பத்து

**வாஹனாதிகள் :**

1. அன்ன வாஹனம்
2. சிம்ம வாஹனம்
3. ஹனுமந்த வாஹனம்
4. வெள்ளி கருட வாஹனம்
5. சேஷ வாஹனம்
6. யானை வாஹனம்
7. குதிரை வாஹனம்
8. ஆடும் பல்லக்கு

திருப்பணியின் மூலம் ராஜகோபுரம் கம்பீரமாக அமைக்கப் பட்டுள்ளது.

**நவீன பொது கழிவறை மற்றும் குளியறை : (கட்டணம் வசூல்)**

வெளிப்பிரஹாரம் கோயில் பின்புறம் நவீன பொதுக் கழிவறை, குளியறை கட்டப்பட்டு பயன்படுத்தப்பட்டு வருகிறது

**சீட்டு விபரங்கள் :**

இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் அவர்கள் மூ.மு. 113761 99 நாள் 22.12.2000 அனுமதிப்படி நடைமுதலில் உள்ள சீட்டுகள் விபரம் :

1. அஷ்டோத்திரம்
2. கற்பூர ஹாரத்தி
3. ஸகஸ்ரநாமம்
4. ரக்ஷைத் தகடு வைக்க
5. ரக்ஷாபந்தனம் செய்ய
6. சந்தனக்காப்பு
7. ஸ்நபன திருமஞ்சனம்
8. சின்ன திருமஞ்சனம்
9. பெருமாள் புறப்பாடு கட்டணம்
10. லக்ஷார்ச்சனை
11. காணிக்கை ரசீது தங்கம் வெள்ளி பாத்திரம் பரிவட்டம் கால்நடை ரசீது
12. தளிகைச்சீட்டு
13. வடைமாலை செய்ய
14. வடைமாலை சாத்த
15. மாவிளக்கு
16. இதர கல்யாணம்
17. காதுகுத்து
22. திருமணக்கட்டணம்
23. முடிக்கட்டணம்
24. கழிவறைக் கட்டணம்

வாரமிருப்போர் அனுஷ்டிக்க வேண்டிய முக்கிய விதிகள் :

1. மண்டலம் என்பது இவ்விடத்தில் 48 நாள் என்ற அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. ஆகையால் ஸேவைக்கு வருபவர்கள் ஒரு மண்டலம், அரைமண்டலம் அல்லது கால் மண்டலமாவது கட்டாயம் இருக்க வேண்டும்.

2. வாரம் அல்லது ஸேவையில் இருப்பவர்கள் எந்த தினத்தில் வாரம் ஆரம்பிக்கிறார்களோ அத்தினம் காலை விஸ்வரூப பூஜை முதல் ஆரம்பித்துக் கணக்கிடல் வேண்டும். (பெண்கள் மாதப்பொழுதான நாட்கள் நீக்கி கணக்கிட வேண்டும்.)

3. வாரத்திற்கு இருக்கும்பொழுது வாரம் இருப்பவர் வெளி ஊர்களுக்குச் செல்வதோ, போய் உடனே திரும்பிவிடலாம் என்பதோ வாரத்திற்குக் குறையுண்டாக்கும் செய்கை எக்காரணத்தைக் கொண்டும் அப்படி வெளியில் செல்லக்கூடாது. அப்படிப் போனால் வாரத்தை மறுபடி தொடர வேண்டி வரும் வாரம் அனுஷ்டிக்க ஆரம்பம் செய்கிறவர்கள் இதற்குமுன் ஏதாவது ரக்ஷை, மந்திரக்கயிறுகள் கட்டியிருந்தால் அவைகளை அகற்றி விடவேண்டும்.

4. வாரம் இருப்பவர்கள் காலை, மாலை இரண்டு வேலைகளிலும் திருமஞ்சனக் காவேரியில் கட்டாயம் ஸ்நானம் செய்து மடியுடன் (ஆசாரத்துடன்) இருக்க வேண்டும். ஸ்நானத்திற்கு சோப்புகளோ வேறு எவ்வித உபகரணங்களோ உபயோகிக்க கூடாது. எண்ணெய் தைலங்களும் உபயோகிக்க கூடாது. ஆண்கள் வாரம் முடியும் வரை தீக்ஷை வகிக்க வேண்டும். பெண்கள் அலங்கார வாஸனை திரவியங்களோ புஷ்பங்களோ உபயோகிக்கக் கூடாது. சந்தனமும் பூசக்கூடாது. லாகிரி வஸ்துகள், வெற்றிலை போடுதல், மாமிச உணவு உபயோகித்தல் விலக்கப்பட வேண்டும்.

5. ஸ்நானம் முடிந்தவுடன் மடிவஸ்திரம் தரித்துக்கொண்டு (ஆண்கள் சட்டை பனியன் அணியாமல்) யாதொரு ஆகாரமும் அருந்தாமல் பகவத் ஸந்நிதானம் சென்று விஸ்வரூப தரிசனம் ஸேவித்த பிறகு கோயிலின் உள்பிரகாரத்தை வலம் வரவேண்டும். தவிர அடிப்ரதக்ஷிணம், அங்கப்பரதக்ஷிணம் அவரவர்கள் சக்திக்கு ஏற்றார்போல் செய்து கொள்ளவும். பிரகாரம் வலம் வரும்போது

பகவான் விமான ஸ்தூபியையும் தரிசனம் செய்து கொள்ள வேண்டும். பிறகு உடன் நடக்கும் காலை சந்தி பூஜை தீபாரதனை ஸேவித்து தீர்த்தம் ப்ரஸாதம் விநியோகம் பெற்றுக்கொண்டு பிறகு அவரவர்கள் ஸௌகரியப்படி சிறிது ஆகாரம் உட்கொள்ளலாம்.

6. காலை விஸ்வரூப தரிசனம், காலசந்தி பூஜை, உச்சிகாலை பூஜை, சாயரக்ஷை, அர்த்தஜாமம் இந்த சமயங்களில் கட்டாயம் ஸந்நிதியில் இருந்து எம்பெருமானுக்கு நடைபெறும் தீபாராதனைகளில் வழிபட்டு ப்ரசாதங்கள் தீர்த்தங்கள் பெற வேண்டும்.

7. வாரமிருப்பவர்கள் பகவத் ஸ்ந்நிதிலேயே பகவானுக்கு எதிரில் உச்சிக்கால பூஜை வரை ஸ்தோத்திரம் செய்தோ, தியானம் செய்து கொண்டோ பயபக்தியுடன் அமர்ந்திருக்க வேண்டும்.

8. உச்சிகால பூஜை எந்த நேரத்தில் நடந்த போதிலும் தீபாராதனை ஸேவித்து தீர்த்தம் முகத்தில் தெளித்துக்கொண்டு விநியோகம் செய்யும் பிரசாதங்கள் பெற்றுக்கொண்டபின் நமஸ்காரங்கள் செய்துவிட்டு இருப்பிடங்களுக்குச் செல்லவேண்டும். பகவத் பிரசாதமே (நைவேத்தியம்) சாப்பிடுதல் மிக விசேஷம். அடிக்கடி ஆகாராதிகள் செய்யாமல் குறைத்துக்கொள்வது மிக முக்கியமான விஷயம். தாங்களே தயார் செய்து கொள்ளும் ஆகாரம் – சாப்பாடு பச்சை அரிசியிலானதாய் இருக்கவேண்டும்.

9. காலையில் விஸ்வரூப் தரிசனம் செய்யப்போகுங்கால் பசுவின்பால் கொண்டுபோய் ஸந்நிதியில் பூஜைக்கு சேர்க்க வேண்டுமே தவிர பக்கத்திலுள்ள கருடனிடமோ, வேறு இதர இடங்களிலோ சேர்ப்பது கூடாது.

10. வாரத்திற்கு இருந்து வருபவர்கள் அவரவர்கள் சக்திக்கு தகுந்தபடி ஸஹஸ்ரநார்மர்ச்சனையோ அஷ்டோத்திரமோ பிரதி தினமும் செய்து வரவேண்டும். வசதி உள்ளவர்கள் ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்தால் தளிகை நிவேதனம் செய்து சிறிது கோஷ்டி (விநியோகம்) செய்து மிகுதியைச் சாப்பிடுவது விசேஷம். சனிக்கிழமை பகவானுக்கு விசேஷ தினம். அன்றைய தினம் ஸகஸ்ரநாம அர்ச்சனையை கட்டாயம் செய்வது அவசியம். சனிக்கிழமை அங்கப்பிரதக்ஷிணம் செய்வது அவசியம்.

11. மாலையிலும் குளித்து மடியுடன் வந்து சாயரக்ஷை முதல் ஸந்நிதியில் இருந்து பகலில் போலவே ப்ரஸாதங்கள் தீர்த்தங்கள் பெற்றுக்கொண்டு அர்த்தஜாமம் வரையிலும் பகவானைத் தியானம் செய்து கொண்டு ஸந்நிதியிலேயே இருத்தல் வேண்டும். சக்தியுள்ளவர்கள் இரவிலும் ஸ்வாமிக்கு நாமாவை தியானம் செய்து கொண்டு முடிந்தவரை பிரக்ஷணம் செய்யலாம். இப்போது அங்கப்பிரதக்ஷணம் செய்வது கூடாது. அர்த்தஜாம பூஜையில் தீர்த்தம் தெளித்துக்கொண்டு ப்ரசாதங்கள் வாங்கிக்கொண்டபின் நமஸ்காரம் செய்துவிட்டு இருப்பிடம் செல்லவேண்டும். பின்பு பலகாரம் எடுத்துக் கொள்ளலாம். இரவில் பலகாரம் தான் செய்து கொள்ளவேண்டும். (அன்னம் சேர்க்கக்கூடாது) முடிந்தவர்கள் பலகாரமும் செய்யாமல் பழமும், பாலும் மட்டும் எடுத்துக்கொள்ளலாம்.

12. ஸேவைக்கு வந்தவர்கள் பகவானின் கிருபை ஏற்பட்ட பின்போ ஸங்கல்ப்படி சிலகாலம் தங்கித் திரும்பும் போதோ பகவானின் பரிபூரண கிருபை எப்பொழுதும் இருக்கும் பொருட்டு ரக்ஷை கட்டிக்கொண்டு செல்வது என்பது முக்கியம் (இது பற்றிக் கொஞ்சம் விவரிக்க வேண்டியது அவசியமாகிறது)

வாரம் ஆரம்பித்த தினமே ரக்ஷைத்தகடு பகவான் பாதாரவிந்தத்தில் ( வாரமிருப்பவர் பெயருக்கு) வைக்க வேண்டும். தங்கத்தகடோ, தாமிரத் தகடோதான் வைக்க வேண்டும். தங்கம் ரொம்ப விசேஷம். வெள்ளித் தகடு கூடாது. தகடுகள் வைக்கும் முறைகளை கோவிலில் அர்ச்சகர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்வது நல்லது. கால்மண்டலம், அரை மண்டலம் இருப்பவர்கள் பகவத் அனுக்ரஹத்தை சீக்கிரம் அடைந்து விட்டாலும் அல்லது முக்கியமாக திரும்பி செல்லும்போது ஏற்கனவே வைத்திருக்கும் ரக்ஷைத் தகட்டை தாயத்தில் பந்தனம் செய்து கட்டாயம் கட்டிக்கொண்டு போகவேண்டும்.

13. ரக்ஷை கட்டிக்கொண்டபின் ஊர் (இருப்பிடம்) திரும்புவர்கள் வசதியுள்ளவர்களாய் இருந்தால் சிறிய திருமஞ்சனம் செய்து கம்பத்தடியானுக்கு வடைமாலை சாத்திப்போவது நல்லது.

14. பகவானுடைய அனுக்ரஹம் அவரவர்களின் கர்மாநுசாரங்களைப் பொறுத்திருக்கும் இதற்காக பகவானையோ, பிறரையோ குறைகூறுவது வாரமிருந்ததின் பலனை இழந்ததாகும். மேலும் மேலும் நம் குறைகளைப் பகவானிடம் முறையிடுவதுதான் சிறந்த வழி.

சுபம்.




ஸ்ரீ:

## ஸ்ரீமத் விக நஸாசார்யன்

சங்காரிம் வரதா அபயாத் த்ருத சதுர்பாஹூம்  ரமாநந்தநம் |
ஹஸ்தாப்ஜம்  ஹரிமாநஸோத் பவமஹம் பத்மோத்ப வஸ்யாக்ரஜம் ||
உ த்யத்தண்ட கமண்டலாதி பரிதம் கர்பஸ்த்த சக்ராங் நநம் |
வந்தே ச்ருங்கரி நாஜிநம் விகநஸம் யோக ப்ரபாவல்லபம் ||

லக்ஷ்மீவல்லப ஸங்கல்ப வல்லபாய மஹாத்மனே |
ஸ்ரீமத் விகநஸே பூயாந் நித்ய ஸ்ரீர் | நித்யமங்களம் ||